கணபதி துணை

மதுரைக்கூடலூர்கிழார் இயற்றிய

# முதுமொழிக் காஞ்சியும்

ஔவையார் அருளிச்செய்த

# மூதுரை, நல்வழியும்.

இஷ்டப்  பிரகாரம்.

4512 IV.B.23

பலவான்குடி

ராம. சும. சு.

சுப்பிரமணியன்செட்டியார் அவர்கள்

பொருளுதவியால்

கோநகர்:

தனவைசியன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

1915.

இது விலையில்லாமற் கிடைக்கும்.

4512
IV.B.23 (ஆ)

உ

கணபதிதுணை.

மதுரைக்கூடலூர்கிழார் இயற்றிய

# முதுமொழிக் காஞ்சியும்

ஔவையார் அருளிச்செய்த

# மூதுரை, நல்வழியும்,

இரண்டாம் பிரசுரம்.




பலவான்குடி

ராம. கும. சு.

சுப்பிரமணியன்செட்டியார் அவர்கள்

பொருளுதவியால்

கோநகர்:

தனவைசியன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

இராட்சஸஹு ஆவணிமீ

1915

MAHAMAHOPADHYAYA
DR. U.V. SWAMINATHA IYER LIBRARY
BESANT NAGAR, MADRAS-600 090.

கணபதி துணை.

# முகவுரை.

---

தமிழ்மொழி வளர்க்குந் தகையுடைப்பெரியீர்!

செந்தமிழ் பயிலுஞ் சிறுவர்க்குபயோகமாகும் வண்ணம் ஆத்திசூடி முதலிய பழைய நூல்களையெல்லாம் பிழையற அச்சிட்டு விலையின்றிக் கொடுப்பின், அது இத்தமிழ்நூலிற்குப் பேருபகாரமும், தமிழ் வளர்தற்கேதுவுமாகுமென்று, மதுரைத்தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ்க் கலாசாலைத் தலைமையுபாத்தியாயரும், செந்தமிழ்ப் பத்திராதிபரும், இந்நகர்க் கற்பகவிநாயக கலாசாலைப் பரீக்ஷாதிகாரியுமாகிய வித்துவான் ஸ்ரீமத். உ.ப. வே. திரு. நாராயணையங்காரவர்கள் பிரேரேபிக்க, அதனையனுசரித்து ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை என்னும் மூன்றுசிறுநூல்களும் ஆனந்தவருஷம் தை மாதத்திற் கற்பகவிநாயக கலாசாலையின் முதற்பிரசுரமாக வெளியிடப்பெற்றன. அந்தப்பிரசுரம் ஷை கலாசாலையிற் படிக்கும் முதல் வகுப்பு மாணவர்க்குப் பாடபுத்தகமாக வைக்கப்பெற்றிருப்பதுடன், இத்தமிழ் நாட்டிலே கல்விபயிலும் இளைஞர்க்கெல்லாம் விலையின்றிக் கொடுக்கப்பெற்றும் வருகின்றது.

பின்னர், இன்சொல் ஈகை முதலிய உயர்குணம்பொருந்தியவரும், இச்சபாபிமானியுமாகிய புலவான்குடி ஸ்ரீமான்

ராம. குமா. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் இரண்டாவது பிரசுரத்துக்கு வேண்டிய பொருளுதவிசெய்ய அதுகொண்டு இப்புத்தகம் வெளியிடலாயிற்று. இவ்வாறே மற்றைப் பிரசுரங்களும் முறையாக வெளிவரும் வண்ணம் எல்லாம் வல்ல ஈசன் திருவருள்புரிக.

கோநகர் 7-8-15 } இங்ஙனம்: ஞானசம்பந்த நற்சபையார்.

குறிப்பு :—இப்புத்தகத்தை அடியிற்கண்டவர்களிடம் விலையின்றி நேரே பெற்றுக்கொள்ளலாம். அயலூரிலுள்ளவர்கள் தபாற்செலவுக்கு ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக் கொள்ளவேண்டும். தபாற்செலவு—ஒருபிரதிக்கு அரையணாவும், அதற்குமேற் பிரதியொன்றுக்குக் காலணா வீதமும் அனுப்பவேண்டும்.

புத்தகம் கிடைக்கும் இடங்கள் :—

காரியதரிசி, ஞானசம்பந்த நற்சபை,
கோனபட்டு, புதுக்கோட்டை ஸ்டேட்.

ராமா. குமா. சு. சுப்பிரமணியன்செட்டியாரவர்கள்,
பலவான்குடி, இராமநாதபுரம் ஜில்லா.

4512.
IV.B.23 (ஆ)

உ

கணபதி துணை.

# மதுரைக் கூடலூர்கிழார் இயற்றிய

# முதுமொழிக்காஞ்சி.

---

## க-வது சிறந்தபத்து.

க. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை.
உ. காதலிற் சிறந்தன்று கண்ணாஞ்சப் படுதல்.
௩ மேதையிற் சிறந்தன்று கற்றது மறவாமை.
௪. வண்மையிற் சிறந்தன்று வாய்மை யுடைமை.
௫. இளமையிற் சிறந்தன்று மெய்பிணி யின்மை.
௬. நலனுடை மையி னாணுச் சிறந்தன்று.
௭. குலனுடை மையிற் கற்புச் சிறந்தன்று.
௮. கற்றலிற் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று.
௯. செற்றாரைச் செறுத்தலிற் றற்செய்கை சிறந்தன்று.
௰. முற்பெரு கலிற்பிற் சிறுகாமை சிறந்தன்று.

## உ-வது அறிவுப்பத்து.

க. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
பேரிற் பிறந்தமை யீரத்தி னறிப.
உ. ஈர முடைமை யீகையி னறிப.
௩. சோரா நன்னட் புதவியி னறிப.
௪. கற்ற துடைமை காட்சியி னறிப.

௫. ஏற்ற முடைமை யெதிர்கோளி னறிப.
௬. சிற்றிற் பிறந்தமை பெருமிதத்தி னறிப.
௭. சூத்திரஞ் செய்தலிற் கள்வனாத லறிப.
௮. சொற்சோர் வுடைமையி னெச்சோர்வு மறிப.
௯. அறிவுசோர் வுடைமையிற் பிறிதுசோர்வு மறிப
௰. சீருடை யாண்மை செய்கையி னறில.

## ௩-வது பழியாப்பத்து.

௧. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
யாப்பி லோரை யியல்புகுணம் பழியார்.
௨. மீப்பி லோரை மீக்குணம் பழியார்.
௩. நிறையச் செய்யாக் குறைவினை பழியார்.
௪. முறையி லரசர்நாட் டிருந்து பழியார்.
௫. பெருமை யுடையத னருமை பழியார்.
௬. அருமை யுடையதன் பெருமை பழியார்.
௭. செய்தக்க நற்கேளிர் செய்யாமை பழியார்
௮. அறியாத தேசத் தாசாரம் பழியார்.
௯. வறியோன் வள்ளிய னன்மை பழியார்.
௰. சிறியா ரொழுக்கஞ் சிறந்தோரும் பழியார்.

## ௪-வது துவவாபபதது.

௧. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
பழியோர் செல்வம் வறுமையிற் றுவ்வாது.
௨. கழிதறு கண்மை பேடியிற் றுவ்வாது.
௩. நாணில் வாழ்க்கை பசித்தலிற் றுவ்வாது.

௪. பேணிலீகை மாற்றலிற் றுவ்வாது.
௫. செய்யாமை மேற்கோள் சிதடியிற் றுவ்வாது.
௬. பொய்வே ளாண்மை புலைமையிற் றுவ்வாது.
௭. கொண்டுகண் மாறல் கொடுமையிற் றுவ்வாது.
௮. அறிவிலி துணைப்பாடு தனிமையிற் றுவ்வாது
௯. இழிவுடை மூப்பங் கதத்திற் றுவ்வாது.
௰. தானோ ரின்புற றனிமையிற் றுவ்வாது.

## ௫-வது அல்லபத்து.

க. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
நீரறிந் தொழுகாதா டார மல்லள்.
உ. தாரமா ணாதது வாழ்க்கை யன்று.
௩. ஈரமல் லாதது கிளைநட் பன்று.
௪. சோரக் கையன் சொன்மலை யல்லன்.
௫. நேரா நெஞ்சத்தோ னட்டோ னல்லன்.
௬. நேராமற் கற்றது கல்வி யன்று.
௭. வாழாமல் வருந்தியது வருத்த மன்று.
௮. அறத்தாற்றி னீயாத தீகை யன்று.
௯. திறத்தாற்றி னோலா தநோன் பன்று.
௰. மறுபிறப் பறியா ததுமூப் பன்று.

## ௬-வது இல்லைபத்து.

க. ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்
மக்கட் பேற்றிற் பெறும்பே றில்லை.
உ. ஒப்புர வறிதலிற் றகுவர வில்லை.

௩. வாய்ப்புடை வழக்கி னல்வழக் கில்லை.
௪. வாயா வழக்கிற் றீவழக் கில்லை.
௫. இயைவது கரத்தலிற் கொடுமை யில்லை.
௬. உரையில னாதலிற் சாக்கா டில்லை.
௭. நசையிற் பெரியதோர் நல்குர வில்லை.
௮. இசையிற் பெரியதோ ரெச்ச மில்லை.
௯. இரத்தலி னூஉங் கிளிவர வில்லை.
௰. இரப்போர்க் கீதலி னெய்துஞ்சிறப் பில்லை.

## ௭-வது பொய்ப்பத்து.

௧. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
பேரறிவி னோனினிது வாழா மைபொய்.
௨. பெருஞ்சீ ரோன்றன் வெகுளியின் மை பொய்.
௩. கள்ளுண் போன்றன் சோர்வின் மைபொய்.
௪. கால மறியாதோன் *கையுறல் பொய்.
௫. மேல்வர வறியாதோன் றற்காத் தல்பொய்.
௬. உறுவினை காய்வோ னுயர்வுவேண் டல்பொய்.
௭. சிறுமைநோ னாதோன் பெருமைவேண் டல்பொய்
௮. பெருமைநோ னாதோன் சிறுமைவேண் டல்பொய்
௯. பொருணசை வேட்கையான் முறைசெ யல்பொய்
௰. வாலிய னல்லாதோன் றவஞ்செய் தல்பொய்.

## ௮-வது எளியபத்து.

௧. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
புகழ்வெய் யோர்க்குப் புத்தேணா டெளிது.

---

* கைத்துறல் என்றும் பாடம்.

உ. உறழ்வெய் யோருக் குறுசெரு வெளிது.

௩. ஈரம்வெய் யோர்க்கு நசைகொடை யெளிது.

௪. குறளைவெய் யோர்க்கு மறைவிரி யெளிது.

௫. துன்பம் வெய்யோர்க் கின்ப மெளிது.

௬. இன்பம்வெய் யோர்க்குத் துன்ப மெளிது.

௭. உண்டிவெய் யோர்க்கு றுபிணி யெளிது.

௮. பெண்டிர்வெய் யோர்க்குப் படுபழி யெளிது.

௯. பாரம்வெய் யோர்க்குப் பாத்தூ ணெளிது.

௰. சார்பி லோருக் குறுகொலை யெளிது.

௯· பத்து நல்கூர்ந்தபத்து.

க. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
முறையி லரசனாடு நல்கூர்ந் தன்று.

உ. மிகமூத் தோன்காம நல்கூர்ந் தன்று.

௩. செற்றுடன் உறைவோனைச் சேர்தல் நல்கூர்ந்தன்று.

௪. பிணிகிடந் தோன்பெற்ற வின்பநல் கூர்ந்தன்று.

௫. தற்போற் றாவழிப் புலமைநல் கூர்ந்தன்று.

௬. முதிர்வுடை யோன்மேனி யணிநல் கூர்ந்தன்று.

௭. சொற்செல் லாவழிச் சொல்லுநல் கூர்ந்தன்று.

௮. அகம்வறி யோனண்மை நல்கூர்ந் தன்று.

௯. உட்கில் வழிச்சின நல்கூர்ந் தன்று.

௰. நட்பில் வழிச்சேற னல்கூர்ந் தன்று.

## ௰-வது தண்டாப்பத்து.

க. ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓங்கல் வேண்டுவோ னுயர்மொழி தண்டான்.
உ. வீங்கல் வேண்டுவோன் பலபுகழ் தண்டான்.
ங. கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்.
ச. நிற்றல் வேண்டுவோன் றவஞ்செய றண்டான்.
ரு. வாழ்க்கை வேண்டுவோன் சூழ்ச்சி தண்டான்.
சா. மிகுதி வேண்டுவோன் றகுதி தண்டான்.
எ. இன்பம் வேண்டுவோன் றுன்பந் தண்டான்.
அ. துன்பம் வேண்டுவோ னின்பந் தண்டான்.
கூ. ஏமம் வேண்டுவோன் முறைசெய றண்டான்.
௰. காமம் வேண்டுவோ னின்பந் தண்டான்.

முதுமொழிக்காஞ்சி முற்றிற்று.



உ

கணபதி துணை.

ஔவையார் அருளிச்செய்த

# மூதுரை.

---

## காப்பு.

வாக்குண்டா நல்ல மனமுண்டா மாமலராள்
நோக்குண்டா மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கை யான்பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு.

ஆதிரை யானை யடிபணிந் தேத்த
மூதுரை வெண்பா முப்பதும் வருமே.

நன்றி யொருவற்குச் செய்தக்கா லந்நன்றி
யென்று தருங்கொ லெனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்றருத லால். (௧)

நல்லா ரொருவர்க்குச் செய்த வுபகாரங்
கன்மே லெழுத்துப்போற் காணுமே—யல்லா
வீரமிலா நெஞ்சத்தார்க் கீந்த வுபகார
நீர்மே லெழுத்திற்கு நேர். (௨)

இன்னா விளமை வறுமைவந் தெய்தியக்கா
லின்னா வளவி லினியவு—மின்னாத
நாளல்லா நாட்பூத்த நன்மலரும் போலுமே
யாளில்லா மங்கைக் கழகு. (௩)

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலு நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலு மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (௪)

அடுத்து முயன்றாலு மாகுநா ளன்றி
யெடுத்த கருமங்க ளாகா—தொடுத்த
வுருவத்தா னீண்ட வுயர்மரங்க ளெல்லாம்
பருவத்தா லன்றிப் பழா. (௫)

உற்ற விடத்தி லுயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கிற்
றளர்ந்து வளையுமோ தான். (௬)

நீரளவே யாகுமா நீராம்ப றான்கற்ற
நூலளவே யாகுமா நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வங்
குலத்தளவே யாகுங் குணம். (௭)

நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவு நன்று. (அ)

தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது.

MAHAMAHO. ADHYAYA
DR. U.V. SWAMINATHA IYER LIBRARY
TIRUVANMIYUR . . MADRAS 41


நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாந்—தொல்லுலகி
னல்லா ரொருவ ருளரே லவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யு மழை. (௧௦)

பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனான் முளையாதாங்—கொண்டபே
ராற்ற லுடையார்க்கு மாகா தளவின்றி
யேற்ற கருமஞ் செயல். (௧௧)

மடல்பெரிது தாழை மகிழினிது கந்த
முடல்சிறிய ரென்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூற
லுண்ணீரு மாகி விடும். (௧௨)

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கு
மவையல்ல நல்ல மரங்கள்—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். (௧௩)

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. (௧௪)

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
யாங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரங்
கல்லின்மே லிட்ட கலம். (௧௫)

அடக்க முடையா ரறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையி
லோடுமீ னோட வுறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாங் கொக்கு. (கசு)

அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோ
லுற்றுழித் தீர்வா ருறவல்ல—ரக்குளத்திற்
கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே
யொட்டி யுறுவா ருறவு. (கஎ)

சீரியர் கெட்டாலுஞ் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாகுஞ்—சீரிய
பொன்னின் குடமுடைந்தாற் பொனாகு மென்னாகு
மண்ணின் குடமுடைந்தக் கால். (கஅ)

ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன். (ககூ)

உடன்பிறந்தார் சுற்றத்தா ரென்றிருக்க வேண்டா
வுடன்பிறந்தே கொல்லும் வியாதி—யுடன்பிறவா
மாமலையி லுள்ள மருந்தே பிணிதீர்க்கு
மம்மருந்து போல்வாரு முண்டு. (உ0)

இல்லா ளகத்திருக்க வில்லாத தொன்றில்லை
யில்லாளு மில்லாளே யாமாயி—னில்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும். (உக)

... IYAVA
Dr. U.V. SWAMINATHA IYER LIBRARY
... NAGAR, MADRAS-600 090.


எழுதியவா றேகா ணிரங்குமட நெஞ்சே
கருதியவா றாமோ கருமம் - கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காயீந்ததேன்
முற்பவத்திற் செய்த வினை. உஉ)

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே-விற்பிடித்து
நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். உ௩)

நற்றா மரைக்கயத்தி னல்லன்னஞ் சேர்ந்தாற்போற்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்
காக்கை யுகக்கும் பிணம். (உ௪)

நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையு
மஞ்சாப் புறங்கிடக்கு நீர்ப்பாம்பு—நெஞ்சிற்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். (உ௫)

மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—மன்னற்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு. (உ௬)

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்ற
மல்லாத மாந்தர்க் கறங்கூற்றம்—மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றங் கூற்றமே
யில்லிற் கிசைந்தொழுகாப் பெண். (உ௭)

சந்தன மென்குறடு தான்றேய்ந்த காலத்துங்
கந்தங் குறைபடா தாதலாற்—றந்தந்
தனஞ்சிறிய ராயினுந் தார்வேந்தர் கேட்டான்
மனஞ்சிறிய ராவரோ மற்று. (உஅ)

மருவினிய சுற்றமும வான்பொருளு நல்ல
வுருவு முயர்குலமு மெல்லாந்—திருமடந்தை
யாம்போ தவளோடு மாகு மவள்பிரிந்து
போம்போ தவளோடும் போம். (உகூ)

சாந்தனையுந் தீயனவே செய்திடினுந் தாமவரை
யாந்தனையுங் காப்ப ரறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாங் கண்டீர் மரம். (௩௰)

மூதுரை முற்றிற்று.

---

உ

கணபதி துணை.

ஔவையாரருளிச்செய்த

# நல்வழி

---

பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலுங் கலந்துனக்கு நான்றருவேன்—கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச்
சங்கத் தமிழ்மூன்றுந் தா.

புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொரு—ளெண்ணுங்கா
லீதொழிய வேறில்லை யெச்சமயத் தோர்சொல்லுந்
தீதொழிய நன்மை செயல்.

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கா
ணீதி வழுவா நெறிமுறையின்—மேதினியி
லிட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி.

இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே
யிடும்பொய்யை மெய்யென் றிராதே—யிடுங்கடுக
வுண்டாயி னுண்டாகு மூழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு.

எண்ணி யொருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லாற்—கண்ணில்லான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே
யாங்கால மாகு மவர்க்கு.

வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—விருந்
நெஞ்சம்புண் ணாக நெடுந்தூரந் தாநினைந்து [தேங்கி
துஞ்சுவதே மாந்தர் தொழில். ௫

உள்ளதொழிய வொருவர்க் கொருவர்சுகங்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டு கரையேறி னாலென்
னுடலோடு வாழு முயிர்க்கு.

எல்லாப் படியாலு மெண்ணினா லிவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை—நல்லா
ரறிந்திருப்பா ராதலினா லாங்கமல நீர்போற்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு. ௭

ஈட்டும் பொருண்முயற்சி யெண்ணிறந்த வாயினுமூழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாந்—தேட்ட
மரியாதை காணு மகிதலத்தீர் கேண்மின்
றரியாது காணுந் தனம். ௮

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா
றூற்றுப் பெருக்கா லுலகூட்டு—மேற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலு
மில்லையென மாட்டா ரிசைந்து. ௯

ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலு
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கு மதுவழியே நாம்போ மளவு
மெமக்கென்னென் றிட்டுண் டிரும். ௰

ஒருநா ளுணவை யொழியென்றா லொழியா
யிருநாளுக் கேலென்றா லேலாய்—யொருநாளு
மென்னோ வறியா யிடும்பைகூ ரென்வயிறே
யுன்னோடு வாழ்த லரிது. கக

ஆற்றங் கரையின் மரமு மரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—யேற்ற
முழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. க௨

ஆவாரை யாரே யழிப்பா ரதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவ—ரோவாம
லையம புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம புவியதன் மேல். க௩

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கா
லிச்சைபல சொல்லி யிடித்துண்கை—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மான மழியா
துயிர்விடுகை சால வுறும். க௪

சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்
கபாய மொருநாளு மில்லை—யுபாய
மிதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும். க௫

தண்ணீர் நிலநலத்தாற் றக்கோர்குணங்கொடை யாற்
கண்ணீர்மை மாறாக் கருணையாற்—பெண்ணீர்மை
கற்பழியா வாற்றாற் கடல்சூழ்ந்த வையகத்து
ளற்புதமா மென்றே யறி.

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கா
லெய்த வருமோ விருநிதியம் — வையத்
தறும்பாவ மென்ன வறிந்தன் றிடார்க் கின்று
வெறும்பானை பொங்குமோ மேல். கஎ

பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகி
லுற்றா ருகந்தா ரெனவேண்டார் — மற்றோ
ரிரணங் கொடுத்தா லிடுவ ரிடாரே
சரணங் கொடுத்தாலுந் தாம். கஅ

ந்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும
பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும் — போவிப்பம்
பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையா
னாழி யரிசிக்கே நாம். கசு

அம்மி துணையாக வாறிழிந்த வாறொக்கும்
கொம்மை முலைபகர்வார்க் கொண்டாட்ட — மிம்மை
மறுமைக்கு நன்றன்று மாநிதியம் போக்கி
வெறுமைக்கு வித்தாய் விடும். உ0

நீரு நிழலு நிலம்பொதியு நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வு — மூரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க் கென்றுந்
தருஞ்சிவந்த தாமரையா டான். உக

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானுடரே கேளுங்கள் — கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் பாரே யநுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம். உஉ

வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரஞ் சொன்னார் மனை. உ௩

நீறில்லா நெற்றிபாழ் நெய்யில்லா வுண்டிபாழ்
ஆறில்லா வூருக் கழகுபாழ்—மாறி
லுடற்பிறப் பில்லா வுடம்புபாழ் பாழே
மடக்கொடி யில்லா மனை. உ௪

ஆன முதலி லதிகஞ் செலவானான்
மான மழிந்து மதிகெட்டுப்—போனதிசை
யெல்லார்க்குங் கள்ளனா யேழ்பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனா நாடு. உ௫

மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்து போம். உ௬

ஒன்றை நினைக்கி னதுவொழிந்திட் டொன்றாகு
மன்றி யதுவரினும் வந்தெய்து—மொன்றை
நினையாத முன்வந்து நிற்பினு நிற்கு
மெனையாளு மீசன் செயல். உ௭

உண்பது நாழி யுடுப்பது நான்குமுழ
மெண்பது கோடி நினைந் தெண்ணுவன—கண்புதைந்த
மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்
சாந்துணையுஞ் சஞ்சலமே தான். உ௮

மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
யிரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதங்
கற்றா தரல்போற் கரவா தளிப்பரே
லுற்றா ருலகத் தவர். உ௯

தாந்தாமுன் செய்தவினை தாமே யநுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
யொறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்றா
வெறுத்தாலும் போமோ விதி. ௩0

இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று சாலு
மொழுக்க முயர்குலத்தி னன்று—வழுக்குடைய
வீரத்தி னன்று விடாநோய் பழிக்கஞ்சாத்
தாரத்தி னன்று தனி. ௩௧

ஆறிடு மேடு மடுவும்போ லாஞ்செல்வ
மாறிடு மேறிடு மாநிலத்தீர்—சோறிடுந்
தண்ணீரும் வாருந் தருமமே சார்பாக
வுண்ணீர்மை வீறு முயர்ந்து. ௩௨

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்திற்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். ௩௩

கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயி
னெல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ—ரில்லானை
யில்லாளும் வேண்டாண் மற்றீன்றெடுத்த தாய்வேண்
செல்லா தவன்வாயிற் சொல். [டாள்] ௩௪

பூவாதே காய்க்கு மரமுமுள மக்களுளு
மேவாதே நின்றுணர்வார் தாமுளரே—தூவா
விரைத்தாலு நன்றாகா வித்தெனவே பேதைக்
குரைத்தாலுந் தோன்றா துணர்வு. ௩௫

நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறுங் காலத்திற்
கொண்ட கருவளிக்குங் கொள்கைபோ—லொண்டொடீஇ
போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயன்
மாதர்மேல் வைப்பார் மனம். ௩௬

வினைப்பயனை வெல்வதற்கு வேத முதலா
மனைத்தாய நூலகத்து மில்லை—நினைப்பதெனக்
கண்ணுறுவ தல்லாற் கவலைபடே னெஞ்சேமெய்
விண்ணுறுவார்க் கில்லை விதி. ௩௭

நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்று
மன்றென்று மாமென்று மாகாதே—நின்றநிலை
தானதாந் தத்துவமாஞ் சம்பறுத்தார் யாக்கைக்குப்
போனவா தேடும் பொருள். ௩௮

முப்பதா மாண்டளவின் மூன்றற் றொருபொருளைத்
தப்பாமற் றன்னுட் பெறானாயிற்—செப்புங்
கலையளவே யாகுமாங் காரிகையார் தங்கண்
முலையளவே யாகுமா மூப்பு. ௩௯

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர். ௪௰

நல்வழி முற்றிற்று.

# நன்னடக்கை.

1. காலையில் எழுந்து கடவுளைப் போற்று.
2. கால்கை கழுவிய பால்போல் நீறணி.
3. கற்றபாடத்தை முற்றவும் சிந்தை செய்.
4. காலத்தி லுண்டு கலாசாலை சேர்ந்துகல்.
5. வழியில பிறரோடு விளையா டாதே
6. ஆசான் சொல்வதை அடக்க முடன்கேள்.
7. கேட்ட பாடத்தை மீட்டும் படித்துணர்.
8. உடன் படிப்போ ருடன் ஒற்றுமையாயிரு.
9. புத்தகங் கிழியாது வைத்துப் பேணு.
10. சித்தங் குவிந்து சுத்தமா யிரு.
11. உடைமே லொரு சிறிது மழுக்கடையா துடு.
12. யாவ ருடனும் நேர்மையாய்ப் பேசு.
13. கடுஞ்சொற் சொல்லிற் கண்டோர் பகைப்பர்.
14. கெட்ட பழக்கஞ் சற்று மொட்டாதிரு.
15. புத்தகஞ் சுவரிவை போலன்கெடக் கீறேல்.
16. உண்மையும் நேர்மையும் உறற்பா லனவே.
17. சீவகாருணியம் சிறந்த வொழுக்கம்.
18. தந்தையுந் தாயும் வந்தனைக் குரியார்.
19. குருவை வழிபடல் பெரிய கடமை.
20. ஒழுங்குடன் கருமமே கண்ணுற் றொழுகு.
21. கடவுளை நினைந்து கற்றபடி நட.

